# நெருப்பு மடல்கள்



20.2.2009 இல் கொழும்பில் தாக்குதல் நடத்துவதற்கு முன்னர் சாகப் போகிறோம் என்று தெரிந்தும் தமிழீழ விடுதலைப் போரின் தேசிய தலைவர் பிரபாகரன் உடன் நிற்கும் வான்புலிகள் **கேணல் ரூபன், லெப். கேணல் சிரித்திரன்**



தமிழீழ நாட்டின் விடுதலையை வென்றெடுக்கப் புறப்பட்ட 18 வயதே நிரம்பிய தமிழ் மகள் **தேவகி.**

வான் கரும்புலி

# கர்னல் ரூபனின் இறுதி ஆவணம்

20.2.2009 இல் கொழும்பில்
தாக்குதல் நடத்துவதற்கு முன்னர்
தமிழ் [illegible]க்களுக்கு எழுதிய மடல்

இலங்கைத் தமிழர் பாதுகாப்பு இயக்கம்
ஜி 2, கீழ்த்தளம், 58 மூன்றாவது
முதன்மைச் சாலை, ஆழ்வார் திருநகர் விரிவாக்கம்,
சென்னை - 600 087.

# புலிகளும் தமிழர்களும் வேறு வேறல்ல

எனது அன்பிற்கும் பெரும் மதிப்பிற்கும் உரிய தமிழக மக்களே மற்றும் புலம்பெயர் மக்களே!

மாவீரர்கள் மாவீரர்களாகப் போகின்ற நாங்கள் உங்களுக்குத் தலைவணங்குகின்றோம்.

நீங்கள் எழுச்சிகொண்டு உங்களது உறவுகளாகிய எமது மக்களின் அழிவைக் கண்டு நடத்தும் போராட்டங்களைக் கேட்டு மகிழ்ச்சியும் தன்னம்பிக்கையும் அடைகின்றார்கள்.

'மாவீரன்' முத்துக்குமார் இட்ட தீ இன்று ஐநா வாசலில் கூட பரவியிருக்கின்றது. இப்பொழுதுதான் தமிழரின் பிரச்சினை உலகத்தின் காதுகளில் விழத்தொடங்கியுள்ளது.

எனவே எமது தமிழினத்தின் விடிவிற்கு நீங்கள் செய்யும் தொடர்ச்சியான போராட்டங்கள் பலம் சேர்க்கும். தமிழகத்தில் இருக்கும் அனைத்துக் கட்சிகளும் ஒன்று சேர்ந்து போராட வேண்டும். அப்போதுதான் மத்திய அரசின் - உலகத்தின் - ஐநா.வின் காதுகளில் விழும்.

மனம் தளரவிடாதீர்கள். தொடர்ச்சியாகப் போராடுங்கள். தமிழ் மக்களுக்கு விடிவு வரும்.

**புலம்பெயர் எமது உறவுகளே!**

நீங்கள் செய்த உதவிகளால்தான் எமது போராட்டம் வளர்ச்சியடைந்து நின்றது. அதனைத் தொடர்ச்சியாகச் செய்யுங்கள். விடுதலைப் புலிகள் வேறு மக்கள் வேறல்ல. இது மக்கள் போராட்டம் என்று உலகத்திற்கு எடுத்துக் கூறுங்கள். தினம் தினம் உங்களது உறவுகள் இங்கே கொல்லப்படுகின்றார்கள். அதிலும் கொடுமை இறந்தவரைக் கூட எடுத்து அடக்கஞ் செய்ய முடியவில்லை.

மருந்தில்லை; உணவில்லை; உடையில்லை; உறையுளில்லை. எவ்வளவு கொடுமைகளைச் சிங்கள இராணுவமும் அரசும் செய்கின்றன. தமிழரை வவுனியா திறந்த சிறைச்சாலைக்கு வரவழைத்துத் தமிழினத்தை அழித்துச் சிங்கள இனத்தை உருவாக்கப் போகின்றது.

வன்னியிலே இருந்து உலக நிறுவனங்களையும் கடைசியாகச் செஞ்சிலுவைச் சங்கத்தையும் வெளியேற்றி எமது மக்களின் அவலம் வெளியே தெரியாவண்ணம் மூடி மறைக்க முயல்கின்றது.

விரைவிலே எமது மக்களுக்குக் கொடிய நோய்கள் பரவப் போகின்றன. இவற்றை நீங்கள் உலகத்திற்குத் தொடர்ச்சியாகப் போராடி எடுத்துக்கூறுங்கள். கேளுங்கள் தரப்படும், இல்லா விட்டால் தட்டுங்கள் திறக்கப்படும்.

**அன்புக்குரிய புலம்பெயர் வாழ் தமிழ்மக்களே!**

உலகத்தில் வாழ்ந்த யூத இன மக்கள் எல்லோரும் சேர்ந்து தங்களுக்கென்று இஸ்ரவேல் என்றொரு நாட்டை உருவாக்கியது போல் நீங்கள் எல்லோரும் சேர்ந்து தமிழீழத்தை அமைக்க - உருவாக்க - தயாராகுங்கள்.

எமது மாவீரர்களின் கனவை நனவாக்குங்கள்.

**அன்புள்ள எனது தமிழீழ மக்களே - குறிப்பாக வன்னியில் வாழும் மக்களே,**

நீங்கள் அனுபவிக்கும் கொடும் வலி கண்டு எனது மனம் குமுறுகிறது. கலங்குகின்றது. எமது மக்கள் சுதந்திரமாக வாழ வேண்டும் என்றுதான் எமது தேசியத் தலைவர் போராட்டத்தைத் தொடங்கினார்.

அவ்வேளை நீங்கள்தான் அவருக்கு உத்வேகம் கொடுத்து ஆதரித்துப் போராட்டத்திற்கு வலுச்சேர்த்து உங்கள் பிள்ளை களைப் போராட்டத்தில் இணைத்து எமது அமைப்பை வளரச் செய்தீர்கள். நாம் காலங்காலமாக வாழ்ந்த மண்ணில் சுதந்திரமாக வாழத்தான் ஆசைப்பட்டோம். அது தவறா?

உலகத்தில் வாழும் மக்களில் எமது தமிழ் இன மக்களின் உயிர் உயிரில்லையா? எவ்வளவோ நாடுகள் சுதந்திரம் அடைந்ததற்குக் காரணமாக இருந்த உலக நாடுகள் எமது தமிழினத்தை மட்டும் சிங்களத் தேசம் அழிக்கவிட்டு வேடிக்கை பார்ப்பதன் காரணம்தான் எனக்குப் புரியவில்லை.

**அன்புக்குரிய மக்களே!**

எமக்காகத் தமிழகத்தில் இருக்கும் மக்களும் புலம் பெயர்ந்து வெளிநாடுகளில் இருக்கும் மக்களும் உங்களின்

விடிவிற்காகத் தீக்குளிப்புக்களிலும் பல வகையான அகிம்சைப் போராட்டங்களையும் நடத்தி வருவது உங்களுக்குத் தெரிந்ததே. அவர்களால் வெளியே இருந்து செய்யக் கூடியதைச் செய் கின்றார்கள்.

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் உங்களைப் போராட்டத்தில் இணைத்து உங்கள் விடிவிற்கான இறுதிப்போரில் போராட வேண்டும். தேசியத் தலைவரின் கைகளைப் பலப்படுத்த வேண்டும்.

**அன்புக்குரிய மக்களே!**

எதிரியானவன் பல்வேறு சூழ்ச்சிகள் செய்து அதாவது படிப்படியாக உங்களை உங்களது இடங்களில் இருந்து இடம் பெயர வைத்து உணவுத்தடை, மருந்துத்தடை போட்டு உங்களின் மேல் குண்டுமழை பொழிந்து தினம் சாவுக்குள் வாழவைத்து, பாதுகாப்பு வலயம் என அறிவித்து அதற்குள் உங்களை விட்டுக் குண்டுமழை பொழிந்து உங்கள் உறவுகளைக் கொன்று உங்களைத் தனது திறந்த சிறைச்சாலைக்கு வரச்செய்கின்றான். ஏன் தெரியுமா?

கிட்லர் பல வதைமுகாம்களை அமைத்து யூத இனத்தை அழித்தது போல் மகிந்தவும் உங்களை அழிக்கப் போகின்றான். அது தெரியாமல் நீங்கள் அதற்குள் அகப்படக்கூடாது. கோத்தபாய இராணுவத்திற்குக் கூறியிருப்பது தெரியுமா? ‘தமிழரில் பெண்கள் உங்களுக்கு; ஆண்கள் கடலுக்கு என்று. அதனடிப்படையில் இங்கிருந்த எத்தனை பெண்கள் கற்பழிக்கப்பட்டு இராணுவ மருத்துவமனைகளில் இராணுவத்தை பராமரிப்பதற்கு விடப்பட்டுள்ளார்கள் என்று தெரியுமா? இதைவிட எவ்வளவோ கொடும்செயல்கள் வெளியேதெரியாவண்ணம் உள்ளன.

**அன்புக்குரிய மக்களே!**

எமக்கு இந்த இழிவுநிலை தேவையா? நிச்சயமாக இதை நீங்கள் ஒருபோதும் ஏற்றுக்கொள்ளமாட்டீர்கள். ஏனென்றால் அதற்காகத்தான் நீங்கள் போராடி வருகின்றீர்கள்.

அதற்காக 24,000க்கும் மேற்பட்ட மாவீரர்களை அர்ப்பணித் திருக்கின்றீர்கள். இவர்கள் யார்? போராளிகளாகப் பிறந்தவர்களா? இல்லை. காலம்தான் போராளிகளாக்கியது. போராளிகள் பிறப்ப தில்லை, அவர்கள் உருவாக்கப்படுகின்றார்கள். யார் உருவாக்கியது?

சிங்களத் தேசம் எமக்குரியதைத் தந்திருந்தால் எமது தேசியத்தலைவர் ஆயுதமேந்தத்தேவை ஏற்பட்டிருக்காது.

**அன்புக்குரிய மக்களே!**

நாம் விரும்பியோ விரும்பாமலோ எம்மைப் போராடச் சிங்களத்தேசம் பணித்து விட்டது. 30 ஆண்டுகளாகப் போராடி உங்களது இறுதி இலட்சியமாம் தமிழீழத்தை அடையும் நேரம் வந்திருக்கும் வேளை நீங்கள் போராட்டத்தை விடப்போகின்றீர்களா? உங்கள் விடிவிற்காக நீங்கள்தான் போராட வேண்டும்.

நீங்கள் போராடாவிட்டால் உங்களுக்காக யார் போராடுவது? If we don't fight for our freedom who else will? வன்னியில் இருக்கும் 2,50,000 பேரில் 50,000 பேர் போராட வலுவல்லாமலா இருக்கிறீர்கள்? சிந்தித்துப் பாருங்கள் 50,000 இளைஞர் யுவதிகள் போராட்டத்தில் இணைந்து போராடினால் சிங்கள இராணுவம் வந்த இடம் தெரியாமல் பறந்திடும்.

**அன்புக்குரிய தம்பி, தங்கை, அக்கா, அண்ணா உறவுகளே!**

போராட்டத்திற்கு வயதெல்லை கிடையாது. வயது பார்த்தா இராணுவம் உங்களைக் கொல்கின்றது? 1990ஆம் ஆண்டு 14 வயதில் நான் போராடப் புறப் பட்டேன். காரணம் இடப்பெயர்வு பாடசாலை இல்லை. நாம் நிம்மதியாக வாழ எமக்கென்று ஒரு தேசம் வேண்டுமென்பதால் நீங்களும் அதேபோல்தான் நினைப்பீர்கள்.

உங்களது வலியை நேரில் தினம் தினம் கண்டு மனம் வெதும்பிக் குமுறுவது போல் இன்னொன்றையும் நினைத்துக் குமுறுகிறது. நீங்கள் தாங்குகின்ற வலியை உங்களது வயதில் நான் தாங்கவில்லை அப்படியிருந்தும் என்னைப் போராட உந்தியது.

ஆனால் நீங்கள் எவ்வளவோ வலியை ஏற்படுத்திய சிங்கள இராணுவத்திற்கு எதிராகப் போராட ஏன் இன்னும் கிளர்ந்தெழாமல் இருக்கின்றீர்கள் என்பதை நினைக்க நினைக்க மனம் வெதும்புகின்றது.

சிங்கள இராணுவம் ஏற்படுத்திய வலி காணாதா? இன்னும் வலியை ஏற்படுத்தினால்தான் நீங்கள் போராடுவீர்களா?

**அன்புக்குரிய மக்களே!**

எமது தேசியத் தலைவர் காலத்தில் நீங்கள் சுதந்திரம் அடையாவிட்டால் ஒருகாலமும் நீங்கள் சுதந்திரமாக வாழ மாட்டீர்கள் என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளவேண்டும். தமிழீழத் தேசியத் தலைவர் கூறியது போல் 'ஒரு விடுதலை இயக்கம்

தனித்து நின்று போராடி விடுதலையை வென்றெடுத்ததாகவரலாறு இல்லை. ஒரு விடுதலை இயக்கத்தின் பின்னால் மக்கள் சக்தி அணிதிரண்டு எழுச்சி கொள்ளும் பொழுதுதான் அது மக்கள் போராட்டமாக - தேசியப் போராட்டமாக முழுமையும் முதிர்ச்சியும் பெறுகின்றது. அப்பொழுது தான் விடுதலையும் சாத்தியமாகின்றது.'

'கேளுங்கள் தரப்படும், தட்டுங்கள் திறக்கப்படும்' கேட்டோம் தந்தார்களா? இல்லைஎன்னத்தைதந்தார்கள்? தாங்கொணா வலியைத் தந்தார்கள். அதன்பின்னர் என்னசெய்ய வேண்டும்? தட்டுங்கள் நிச்சயமாகத் திறக்கப்படும்.

அன்புக்குரிய மக்களே!

எல்லோரும் சேர்ந்து ஆயுதம் ஏந்தி விசைவில்லை தட்டுங்கள்! நிச்சயமாக சுதந்திரம் கிடைக்கும்.

அன்புக்குரிய மக்களே!

தமிழருக்கு இருந்த போர்க்குணம் குன்றிவிட்டதா? இல்லை. அதை நீங்கள் இன்னும் வெளிக்காட்டவில்லை. அந்தத் தருணம் வந்துவிட்டது. நான் யார்? நாங்கள் யார்? உங்களது பிள்ளைகள் - நீங்கள் வளர்த்துவிட்ட வர்கள். நாங்கள் வெளிநாடுகளில் இருந்து வந்து போராடவில்லை.

**எனவே அன்புக்குரிய தாய்மாரே! தந்தைமாரே!**

எனது குடும்பத்தில் ஒரு மாவீரர், எனது குடும்பத்தில் இரு மாவீரர் எனப் பார்க்காதீர்கள். போராட வலுவுள்ள உங்களது பிள்ளைகளை நீங்கள்தான் அனுப்பி வைக்க வேண்டும். அப்பொழுதுதான் இளம் சந்ததிக்குச் சுதந்திரமான வாழ்க்கையை அமைத்துக் கொடுக்கலாம். எமக்கென்று ஒரு தேசிய இராணுவத்தைக் கட்டி எழுப்புங்கள். இந்தப் பூமிப்பந்திலே இருப்பை, பலம்தான் தீர்மானிக்கின்றது.

வலிந்தவன் பிழைப்பான் என்ற தத்துவத்திற்கேற்ப எல்லோரும் சேர்ந்து தேசியத் தலைவரின் கையைப் பலப் படுத்துங்கள். எம்மிடம் தேவையான ஆயுதம் உள்ளது. மிகுதி எதிரியிடம் உள்ளது. எமக்கு தேவையானது எல்லாம் ஆளணி ஒன்றுதான்.

பல மடங்கு கொண்ட ஆளணியையும் உலக நாடுகள் வழங்கும் இராணுவ தளவாடங்களையும் கொண்டுள்ள சிங்கள இராணுவத்திற்கு எதிராக குறைந்த ஆளணியை வைத்து இரண்டு ஆண்டுகளுக்கு மேலாக

நாம் போராடுகின்றோம் என்றால் யாருக்கு வெற்றி என நீங்கள் நினைத்துப்பார்த்தீர்களா?

நாங்கள் அழிவது போல் சிங்களத் தேசமும் அழிந்து கொண்டுதான் இருக்கின்றது பொருளாதாரத்தில், இந்தத் தருணம் நீங்கள் திரண்டெழுந்து ஓங்கி ஓர் அடி அடித்தால் எழும்ப முடியாமல் சிங்களம் நொறுங்கும்.

**அன்புக்குரிய இளைஞர் யுவதிகளே!**

உங்களுக்கு உங்களது பெற்றோரைப் பார்க்கும் பொறுப்பு இருக்கும் என்பது தெரியும். தாய் தந்தைமாரைக் காப்பாற்ற வேண்டும் என்றால் தாய் நாட்டைக் காப்பாற்றினால்தான் முடியும். இது கற்பனையல்ல இதுதான் நிஜம். நாம் எவ்வளவு காலம் சாவிற்குள் வாழ்வது? தினம் தினம் செய்தியில் சிங்கள இராணுவத்தின் எறிகணை வீச்சில் - வான் தாக்குதலில் இத்தனைபேர் படுகொலை செய்யப்பட்டுக் காயம்பட்டுள்ளனர் என்பதைத் தான் கேட்கின்றோம், பார்க்கின்றோம்.

இவர்களில் அரைவாசிப்பேர் போராட வலுவுள்ளவர்களாகத்தான் இருக்கின்றார்கள். அந்த வயதில் இவர்கள் ஏன் அநியாயமாகச் சாகவேண்டும்? செத்தவர்கள் வீதியோரங்களிலும் காணிகளிலும் புதைக்கப்படுகின்றார்கள். ஏன் இந்த அவலம்? இவர்கள் எல்லாம் எமது அமைப்பில் இணைந்து ஆயுதம் ஏந்தி இராணுவத்தைக் கொன்று வீரச்சாவு அடைந்தால் தமிழன் வீரத்தோடு வாழ்ந்தான் அல்லது வீரத்தோடு மடிந்தான் என்று வரலாறு சொல்லும்.

**அன்புக்குரிய மக்களே!**

சுதந்திரத்திற்கான காலம் கனிந்து கொண்டிருக்கின்றது. வெண்ணெய் திரண்டுவரும்பொழுது பானையைப் போட்டு உடைத்துவிடாதீர்கள். ஒவ்வொருவரும் தன்நம்பிக்கையாக இருங்கள். உங்களது இன்னல்கள் வலியைக் கண்டுதான் தலைவர் போராட்டத்தை தொடங்கினார். உங்களுக்கு ஏற்படும் வலியைக் கண்டு அவரது மனம் அப்பொழுதிலிருந்து இப்பொழுதுவரை குமுறிக்கொண்டுதான் இருக்கிறது. அதில் எள்ளளவும் குறையவில்லை. நாங்கள் (மாவீரர்கள்) திரும்பத் திரும்ப உங்களிடம் கேட்பது எல்லாம் தலைவரைப் பாதுகாருங்கள். அவரின் கையை பலப்படுத்துங்கள்.

உங்கள் பிள்ளைகளைப் போராட விடுங்கள். தலைவர் நிச்சயமாக உங்களுக்குச் சுதந்திரம் பெற்றுத்தருவார்.

எமக்கும் சிங்கள இராணுவத்திற்கும்தான் யுத்தம் சிங்கள மக்களுக்கல்ல. ஆனால் இராணுவமோ எமது மக்களைக் குண்டு வீசிக் கொல்கின்றது. எமக்கும் சிங்கள மக்களைக் கொல்ல முடியும். சிங்கள மக்கள் இதை தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

ஆனால், நாம் அப்படிச் செய்யவில்லை. நாம் தலைவரைச் சந்தித்துக் குண்டு போடப்போகும் பொழுது திரும்பத் திரும்ப வலியுறுத்துவது மக்கள் மீதோ மருத்துவமனைகள் மீதோ தவறியும் குண்டு போடாதீர்கள் என்று. ஆனால் சிங்கள வான் கழுகுகள் எமது மக்களையும் மருத்துவமனைகளையும் தேடித் தேடிக் குண்டு போடுகின்றன.

நாம் சிங்களத் தேச மக்களுக்கு ஒன்றைத் தெளிவாக சொல்ல விரும்புகின்றோம். தமிழினத்தை அழித்துவிட்டு நீங்கள் நிம்மதியாக வாழலாம் என்று கனவு காணாதீர்கள். எமது தலைவிதியை நாமே தீர்மானித்து உங்களுடன் ஒற்றுமையாக வாழத்தான் நாங்கள் விரும்புகின்றோம். இதைத்தான் நாங்கள் திரும்பத் திரும்ப வலியுறுத்தி வருகின்றோம். நாம் எமது மண்ணில் சுதந்திரமாக வாழத்தான் ஆசைப்படுகின்றோம்.

**அன்புக்குரிய வன்னிவாழ் மக்களே!**

நாம் சிங்கத்தின் குகைக்குள் வெடி சுமந்து போகின்றோம். நாம் யார், தமிழன் யார் எனக் காட்டுவோம். நான் எப்பொழுதும் அநியாயமாகச் சாவதை விரும்பியதில்லை. அந்த வகையில் நான் மாவீரனாக அதிலும் கரும்புலி வீரனாக எனது தாய்நாட்டிற்கும். மக்களிற்கும் பெருமை சேர்ப்பதை நினைத்து நான் பெரும் மகிழ்ச்சியடைகின்றேன்.

திலீபன் அண்ணன் கூறியது போல்

‘மக்கள் புரட்சி வெடிக்கட்டும்! சுதந்திரத் தமிழீழம் அமையும்!’

‘புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்’ தமிழரின் தாகமும் அதுதான்.

இப்படிக்கு,

**தம்பி, அண்ணா,**

**மகன், போராளி இ-ரூபன்.**

பெண்புலி

# தேவகியின் உணர்ச்சிக் கடிதம்

தமிழீழ நாட்டின் விடுதலையை வென்றெடுக்கப் புறப்பட்ட 18 வயதே நிரம்பிய தமிழ் மகள் தேவகி தம் தந்தைக்கு 22.02.09 இல் எழுதிய மடல்

# ஒரு பெண் புலியின் உணர்ச்சிக் கடிதம்!

**அன்புள்ள அப்பாவுக்கு!**

வழமை போல நலம்; நலமறிய ஆவல் என்று எழுத எனக்கு இன்று மனம்வரவில்லை; காரணம் நீங்கள் அறிந்ததே.

பூமிப் பந்து சுற்றுகையையோ அல்லது சுழற்சியையோ நிறுத்தினாலும் என் மனப்பந்து எம்மண்ணை விட்டு அகலாது என்பதை உளமார உணர்ந்து, பனிவிழும் தேசத்தில் எம்மை(யும்) நினைத்து ஏங்கிக் கொண்டிருக்கும் உங்களுக்காகவும் அண்ணா மற்றும் அண்ணிக் காகவும் இம்மடலைச் சற்று விரிவாக எழுதுகிறேன்.

கடந்த ஆண்டு நீங்கள் எழுதி அனுப்பிய கடிதம் சில வாரங்கள் முன்னர் பல தடைகள் தாண்டி, உடைத்து ஒட்டப்பட்டு, இடம்பெயர்ந்து இயங்கிய எமதூர் அஞ்சலகத்தில் இருந்து எமக்குக் கிடைத்தது.

அதில் நீங்கள் எதிர்வு கூறி எழுதியிருந்தவாறு, இங்கு நாளாந்த (அன்றாட) நிலவரம் வரவர மோசமாகிக் கொண்டே போகிறது. கடந்த ஆண்டு, ஐந்தாம் மாதம் 23-ஆம் நாள் எங்களுடைய வீட்டுக்கும், முறிகண்டிச் சந்திக்கும் இடையில் சிறிலங்கா பயங்கரவாத அரசின் ஆழ ஊடுருவும் படை நடாத்திய கிளைமோர்' தாக்குதலால் 6 சிறார்கள் உட்பட்ட 16 பேர் அநியாயமாய் அவலச்சாவடைந்துவிட்டதைப் பற்றியும், புதூர் நாகதம்பிரான் கோயில் விழாவுக்குச் சென்று கொண்டிருந்த மக்கள் மீது இரவு நேரத்தில் மாங்குளத்திற்கும் கரிப்பட்ட முறிப்பிற்கும் இடைப்பட்ட 19-ம் கட்டைப்பகுதியில் 'கிளைமோர்' தாக்குதல் நடத்தப்பட்டுள்ளமை பற்றியும் அறிந்து நீங்கள் மிகவும் பயந்ததாகவும், கவனமாக இருக்கும் படியும் எழுதியிருந்தீர்கள்.

அப்பா! அன்றைய நிகழ்வால் கொல்லப்பட்டவர்களின் உடல்கள் மறுநாள் சனிக்கிழமை, மக்கள் வணக்கத்துடன் ஒரே இடத்தில் பெருங் கதறல்களுடன் அடக்கம் செய்யப்பட்டதை என் கண்களால் நேரிற் கண்டேன் என்று நான் உங்களுக்கு எழுதிய மடலை அனுப்பு முன், நானும் அம்மாவும் எமது அக்கராயன்குளப் பிரதேசத்தை விட்டு இடம்பெயர வேண்டியவர்களாகி விட்டிருந்தோம்.

அதன் பின் நிகழ்ந்த கோழைத்தனமான - அப்பாவி மக்கள் மீதான சிறீலங்கா படையினரின் ஆழ ஊடுருவும் அணியினரின் பல்வேறு

கொடூரத் தாக்குதல்களுக்குப் பின்பாகவும், இன்று வரையும் எமது தாயகம் எங்கும் எத்தனையோ சாவடிப்புகள் பல்வேறு வடிவங்களில் சிங்கள அரசப் படைகளாலும் ஒட்டுக் குழுக்களாலும் குறிப்பிட்ட சில நாடுகளின் போர் உதவிகளுடன் நிகழ்த்தப்பட்டு விட்டன.

கொத்துக் கொத்தாகக் குடும்பம் குடும்பமாக எமது உறவுகள் பல சிங்களப் பேரினவாதப் பூதத்தின் இனப்படுகொலையில் உயிரிழந்து விட்டன.எமது மக்கள் பல்லாயிரக்கணக்கில் வயது வேறுபாடின்றிக் காயப்பட்டு, ஊனமுற்று சிகிச்சை எதுவுமின்றிப் பட்டினியோடு பரிதவித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

அப்பா! பாருங்கோ, எத்தனை தரம் நாங்கள் அந்தக் கோயிலுக்கு அந்தப் பாதையில் போய் வந்திருக்கிறோம்? நீங்கள் வெளிநாடு போனதன் பிற்பாடு அம்மாவும் நானும் சித்தி வீட்டுக்குப் போகிற போதும்.மருத்துவர் பொன்னம்பலம் ஞாபகார்த்த மருத்துவமனைக்குப் போகிறபோதும், பல தடவைகள் போய் வந்த பாதை அது.

ஆனால், இங்கு இப்போதுள்ள நிலைமையை நீங்கள் எல்லோரும் தினமும் இணையதளங்களூடாக அறிந்து கொண்டுதானே இருப்பீர்கள்? சில வாரங்கள் முன் புதுக்குடியிருப்பு வைத்திய சாலையில் என்னுடன் படித்த பிள்ளை ஒருவர் எறிகணை வீச்சில் காயப்பட்டு இருந்ததை அறிந்து பார்க்கச் சென்ற போது, நானும் எதிர்பாராத வகையில் பல்குழல் பீரங்கித் தாக்குதலில் அகப்பட்டுக் கொண்டேன்.

இப்போது நினைத்தாலும் குலை நடுங்குகிறது. அதில் நான் கூட அகப்பட்டுக் காயப்பட்டோ, இறந்தோ இருக்கலாம்தானே? அப்பா, நான்கு பேருள்ள ஒரு குடும்பத்தில், தந்தையும் மூத்த மகனும் அந்த இடத்திலேயே சாக, தாயும் இளைய மகளும் அதே சம்பவத்தில் படுகாயம் அடைந்து அங்கங்களை இழந்து இருக்கிறார்கள்!

அப்பா! ஐம்பத்தெட்டில் நடந்த இனப்படுகொலையின் போது, இலங்கைத் தீவின் தென்பகுதியில் சிறுவர்களாய் இருந்த நீங்களும், அம்மாவும் எவ்வளவு தூரம் துன்பப்பட்டு, மயிரிழையில் உயிர் பிழைத்தீர்கள் எனப் பாட்டாவும் அப்பம்மாவும் சொன்ன வரலாற்றுக் கதைகள் இன்னும் பசுமரத்து ஆணியாய் என் மனத்தில் நன்றாகப் பதிந்துள்ளன.

பின், 77ஆம் ஆண்டு இனப்படுகொலையின் போது அண்ணாவுடன் மலைநாட்டிலிருந்தபோது அகதியாகிப் பிரபல பாடசாலையில் உயிருக்கஞ்சி நீங்கள் தஞ்ச மடைந்ததும் பிறந்து சில நாட்களேயான பாலகனாய் இருந்த பெரியண்ணா கடும் தொற்று நோயினால் பாதிக்கப்பட்டு எதிர்பாராதவகையில் உயிரிழந்ததும் நீங்கள் சொல்லி நான் நன்கு அறிவேன்.

அதன் பின், மீண்டும் 83 ஆம் ஆண்டு இனப் படுகொலையின் போது. எமது வீட்டிற்குக் காடையர் கூட்டம் தீயிட, ஒருவாறு தப்பிப் பிழைத்துக் கப்பலில் வடக்கு நோக்கி அகதியாய் அனுப்பப்பட்ட அவலமும், மாற்றுடையின்றி நீங்கள் தவித்ததும், பக்கத்து வீட்டு ஆட்கள் உதவியுடன் குடிசை போட்டு அவர்கள் வளவுக்குள் தற்காலிகமாய்த் தங்கியதும், பங்கீட்டு அட்டை உணவுக்காகச் சங்கக்கடை வாசலில் விடியுமுன்பே போய் நின்றது பற்றியும் நீங்களும் அம்மாவும் சின்னண்ணாவும் அவ்வப்போது கூறிய அனுபவக் கதைகள் இன்னும் என் மனப் பாறையில் ஆழப் பதிந்து அழியாது உறைந்துள்ளன.

இருபதாண்டுகள் முன், 'அன்பு வழி' யில் 'பூமாலை' யோடு என்று கூறிக் கொண்டு அயல் நாட்டிலிருந்து வந்திறங்கிய ஆக்கிரமிப்புப் படையினன் ஒருவன், ஒரு நாள், தேசம் காக்கின்ற காவல் தெய்வங்களுக்கு உணவு கொடுத்த ஒரு மூதாட்டி பற்றித் தெரியுமா என்று கேட்டுப் பள்ளி சென்ற அண்ணாவின் காதைப் பொத்தி அடித்ததில், அண்ணாவின் செவிப் பறை வெடித்துக் குருதி கசிந்தது, அண்ணாவுக்கு மறந்திருக்காதுதானே?

அதன் பின், நான் பிறந்த பின்பு குடாநாட்டுக்குள்ளேயே எத்தனை தரம் சொந்த வீட்டை விட்டு இடம் பெயர்ந்து அலைந்து திரிந்து இருக்கிறோம் என்று உங்களுக்கும் நினைவிருக்கும்தானே?

அப்பா! நீங்களும் அண்ணாவும் உங்களுக்கு ஒரு கடமை, பொறுப்பு இருக்கிறது என்று கூறியபடி அதைச் செய்தீர்கள். ஆனால் நான்..? இது வரை உங்களதும் அம்மாவினதும் ஆசைப்படி, பல துன்பங்களுக்கு இடையில் படித்து முடித்துவிட்டேன். இப்போது பல்கலைக்கழகம் போகக் கூடிய தகுதி எனக்கு இருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரியும்.

ஆனால் யோசித்துப் பாருங்கோ, பல்கலைக் கழகம் போவதற்குரிய சூழ்நிலை இருக்கிறதா. போனவர்களுக்குப் பாதுகாப்பு உத்தரவாதம்

இருக்கிறதா? என்று. கடந்த ஒரு வருடத்தில் மட்டும் அங்குள்ள அரசப் படையும் அதன் கூலிப் பட்டாளங்களைச் சேர்ந்தவங்களும் எத்தனையெத்தனை மாணவர்களைச் சுட்டுத் தள்ளி விட்டங் களென்று உங்களுக்குத் தெரியுமா?

எத்தனை அப்பாவி மாணவியரை மானபங்கப்படுத்தி இருக்கிறாங்கள் தெரியுமா? யுத்த நிறுத்தம் வந்தபின் சமாதானம்வந்து விட்டதுசுகவாழ்வுகிடைத்துவிட்டதுபிரச்னைதீர்ந்தது என்று நீங்களும் மற்றவர்கள் மாதிரி நம்பி நம்பி ஏமாறி இருக்கமாட்டீர்கள் என்றே நினைக்கிறேன். யுத்த நிறுத்தத்தைக் கண்காணிக்க வந்தவர்களே தாக்கப்பட்டதும், தாங்கள், யுத்தத்தைத்தான் கண்காணிப்பதாக அவர்களே அறிக்கை விட்டதும் நீங்கள் அறிந்திருப்பீர்கள்தானே?

இதைவிட வேறென்ன வேண்டும் இங்கு இருந்த நிலை பற்றிக் கூற? ஆனால் தற்போது, சமரசம் பேசித் தூது வந்து பேச்சு வார்த்தைக்கு இடைத்தரகராய் இருத்தவரே அண்மையில், எங்கள் தரப்பு, எமது மக்களின் சுயபங்களிப்பிலும் எதிரியிடமிருந்து கைப்பற்றியும் சிறுகச் சிறுகச் சேகரித்த ஆயுதங்களைக் கீழே வைக்க வேண்டும் என்று கூறி அறிக்கை விட்டதை அறிந்த போது, எமக்கு அழுவதா சிரிப்பதா என்றே தெரியவில்லை. யுத்த நிறுத்த ஒப்பந்தம் கைச்சாத்தாகி இரண்டாயிரத்து ஐந்நூற்றுக்குச் சற்று மேற்பட்ட இன்றளவுமான நாட்களுக்குள் இந்தச் சர்வதேசத்தின் உண்மை முகம் எது என்பதும் உள் நோக்கம் என்னவென்பதும் எமக்குப் புரியவில்லை என்று இனியும் நாங்கள் கூற முடியுமா?

அப்படி நினைத்து நம்மை நாமே ஏமாற்றலாமா? உங்கள் தலைமுறைத் தலைவர்கள் போல நம் தலைமுறைத் தலைமையுமில்லை; உங்கள் தலைமுறை போல ஏமாற்றப்பட நாங்களும் தயாராக இல்லை.

அம்மாவுக்கு ஏனோ நாம் கடைசியாகக் கட்டி வாழ்ந்த நம் சொந்த வீட்டை விட்டு வெளியேறும் வரை யதார்த்தம் புரியவில்லை. இல்லையில்லை, புரியாத மாதிரி இருந்திருக்கிறா என்றுதான் சொல்ல வேண்டும். அவ கூட இருந்ததால், என்னால் எங்களுடைய தாய் நாட்டுக்குச் சின்னச் சின்னப் பங்களிப்புத்தான் செய்ய முடிந்தது.

பதுங்குக் குழி வெட்டுவது, உடுப்புச் சேர்ப்பது. இளநீர் சேர்ப்பது, 'கிபிர்' தாக்குதல்களில் காயப்பட்டவர்களுக்கு முதலுதவி

செய்வது, குருதித் தானம் வழங்குவது போன்றவற்றை மட்டும்தான் இதுவரை நான் செய்து இருக்கிறேன்.

இப்படியான வேலைகளைப் பொதுவாக எல்லாருமே செய்யலாம் ஆனால்,எல்லையில்நிற்க,எல்லாராலும் முடியாது.என்னைப்போல இள வயது ஆட்கள்தான் இப்போ அதற்கு அவசியம் தேவை.

இந்த நிலை என்று மாறுமோ எனக்குத் தெரியாது. ஆனால் நிச்சயம் மாறும். அதற்குரிய காலம் கனிந்து விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். சந்தேகமே வேண்டாம்... அஞ்சி அஞ்சி... அடங்கி ஒடுங்கி நாம் ஊரூராக ஓடத் தேவை இல்லை. எதிரிக்குப் பயந்து குலை நடுங்கின காலம், காலமாகி விட்டது! நம் சேனைகள் சாணக்கியத்துடன் சாண் இறங்குவது, முழம் முழமாய் முன்னேறி எம் மண்ணை முழுமையாய் மீட்டுச் சாதனை படைக்கவே!

சுற்றிவளைப்புகளும், தேடுதல்களும், சித்திரவதைகளும் வன் புணர்வுகளும், அநியாயக் கருவழிப்புகளும், காணாமற் போகச் செய்தல்களும், கடத்தல்களும், கொள்ளையடிப்புகளும், கொத்துக் குண்டு வீச்சுத் தாக்குதல்களும், பதுங்குக் குழி வாழ்க்கையும் இனி, நமக்கில்லை!

பட்டினி போட்டுப் பாதைகளை மூடி, நோய் தீர்க்கும் மருந்து களைத் தடை செய்து, மருத்துவ வசதிகளை நிறுத்தி, குண்டு களை மழையாய்ப் பொழிந்தும், கிளைமோர் தாக்குதலால் அப்பாவிகளைக் கொன்றழித்தும், நம் சுதந்திர தாகத்தை நசுக்கிட எண்ணுபவனுக்கு, நாம் எல்லோரும் இறுதிப் பதிலடியைப் பரிசாகக் கொடுக்கின்ற காலம் கனிந்து,நெருங்கி வந்து விட்டது.

அதற்காக, ஆயிரமாயிரமாய்த் தம்முயிர் ஈந்த மாவீரர் கனவை நனவாக்கிடவும், உலகெங்கும் அகதியாய் அலைந்து வாழுகின்றநம் தமிழர் மானத்துடன் தலைநிமிர்ந்து எங்களுடைய சொந்த மண்ணில் வாழ்வதற்காகவும், நானும் என்னை எதிர் வரும் 'மகளிர் எழுச்சி நாள்' முதல் முழுமையாய் முழுநேரப் போராளியாய் மண் மீட்புப் போரிலே இணைத்துக் கொள்ளப் போகிறேன்.

இதுவரை நான் முழு நேரப் போராளியாவதற்கு இருந்த ஒரே தடை எனது வயது. அதுவும், அன்றுடன் தீர்வது உங்களுக்குப் புரியும்தானே? நீங்களும் அண்ணாவும் தாயகம் நீங்கி அகதியாகப்

புகலிடம் நாடிப் பனி விழும் தேசமொன்றுக்குச் சென்று ஏறத்தாழ எட்டாண்டுகள் ஆகி இருந்தாலும், இவ்வளவு நாளும் இங்கு நடந்த சம்பவங்கள், சண்டைகள், இடப்பெயர்வுகள், தாக்குதல்கள், மரணங்கள், வீரச்சாவுகள் எல்லாம் பள்ளி மாணவியாய் இருந்த என்னை எத்தனை தூரம் பாதித்து இருக்கும் என்று உங்களுக்கும் நன்றாக விளங்கும் தானே?

என்னைப் பொறுத்தவரையில், **வீட்டிற்கு ஒருவராவது காலமிட்ட கட்டளைப்படி போராடினால்தான் எமது மண் விரைவில் மீட்கப் பட்டு மாணவர் சமூகமாகக் கற்கக் கூடிய நிலைமை நிரந்தரமாக்கப்படும்.**

அப்பா! இப்போதெல்லாம் எமது கிராமத்தவரில், அயல் வீடுகளில், வீட்டுக்கு இரண்டு மூன்றென மாவீரரும் போராளிகளும் உள்ள குடும்பங்களும் உள்ள நிலையில், வீட்டுக்கு ஒரே பிள்ளையாய் இருந்தும், போராளியாகி உள்ளவர் மத்தியில் அண்ணா இங்கிருந்து செய்யாத பணியை, நானாவது நிறைவேற்றாமல் இருக்கலாமா? அப்படிச் செய்தால், இந்த மண் எம்மை மன்னிக்குமா?

இப்போதும் அம்மா, உங்களையும் அண்ணா, அண்ணியையும், நிழற்படத்தில் மட்டும் பார்த்துள்ள தன் பேரப்பிள்ளைகளையும் எப்போ நேரில் பார்ப்போம் என்று பெரும் ஆவலில் இருக்கிறா. எமக்கருகில் விளையாடித் திரியும் தன் பேரக் குழந்தைகளின் வயதுப் பிஞ்சுப் **பாலகர், எதிரியின் தாக்குதல்களில் கண் முன்னே கொல்லப்படும் போதும் காயப்பட்டுக் குருதி வெள்ளத்தில் மிதக்கும் போதும் அவ படும் பாட்டை எழுத்தில் விவரிக்க என்னால் முடியாது.**

அவளுக்கு நான் எது பற்றிச் சொன்னாலும் முன்பு விளங்குவ தில்லை. ஆனால், கடந்த சில நாட்களுக்கு முன் கொடியவன் **கோத்தபாய தன் படையினரை உற்சாகப்படுத்தும் வகையில் ஆற்றிய உரையில் 'இனிமேல் முல்லைத்தீவில் அகப்படும் பெண்கள் அனைவரும் படையினருக்கு விருந்தாகட்டும்; அங்கு அகப்படும் ஆண்களின் இரத்தத்தினால் இந்து சமுத்திரம் சிவப்பாகட்டும்' என்று கூறியது** அவளுக்கு எல்லாவற்றையும் நன்கு தெளிவாக்கிவிட்டது.

தரைப்புலி, கடற்புலி, வான்புலி, கரும்புலி என்று சிறப்புப் படையணிகளுடன் வளர்ந்து பெரும் விருட்சமாகியுள்ள எமதியக்கம், **தற்போது மக்கள் படை, எல்லைப் படை, மாணவர் படை என்றும் கிளை பரப்பி வியாபித்துள்ளது உங்களுக்கும் தெரியுமென நம்புகிறேன்.**

எனக்கும் மனச்சாட்சி இருக்குதானே? நானும் உணர்வுள்ள ஒரு சாதாரண மனிதப் பிறப்புதானே? தன்மானமும் இனமானமும் காக்கவேண்டியது எனது கடமையும்தானே? தமிழீழ அன்னை மண் இதனைத்தானே எங்களிடம் எதிர்பார்க்கிறது? முதல் மாவீரன் சங்கர் அண்ணா, தியாக தீபம் திலீபன் அண்ணா, முதல் பெண்புலி மாலதி அக்கா,வான் கரும்புலிகள் ரூபன் அண்ணா,சிரித்திரன் அண்ணா உள்பட ஏறத்தாழ இருபத்து நான்காயிரம் மாவீரரும் ஆயிரமாயிரம் போராளிகளும் எமதருமை தேசியத் தலைவரும் இத்தனை இலட்சம் மக்களுக்கும் எதனை எதிர்பார்த்து உள்ளார்களோ, அதனை நிறைவேற்றுவதும் எனது கடமை அலலவா? மேலும் அப்பா, அண்ணா, அண்ணி, மருமக்களுக்கு எனதன்பைத் தெரிவியுங்கோ. பேரப்பிள்ளைகளுக்குத் தமிழை நன்கு கற்பியுங்கோ. அவர்களுக்கு எங்களுடைய வரலாற்றைச் சரியான முறையில் சொல்லிக் கொடுங்கோ. தேசப்பற்றோடு தமிழர்களாய்த் தமிழ் உணர்வுள்ளவர் களாய் வீரமும் மானமும் உள்ள மனிதர்களாய்த் தொப்பூழ்க்கொடி உறவுகளை மறவாதவர்களாய் வளரச் செய்யுங்கோ.

வேறென்ன அப்பா?

இதை எழுதத் தொடங்கும் நேரத்தில்தான் வான் புலிகளின் முதற் கரும்புலித் தாக்குதல் பற்றிய வெற்றிச் செய்தி புலிகளின் குரலினூடாக என் காதுகளில் வந்து வீழ்ந்தது. இப்போது எமக்கு அண்மையிலுள்ள மைதானத்தில் அந்தக் கரும்புலிகள் இருவரது நினைவாகவும் வேறு சில மாவீரர் நினைவாகவும் வீரவணக்க நிகழ்வு தொடங்கிவிட்டது. '**இந்த மண் எங்களின் சொந்த மண்**' என்ற பாட்டு கேட்கிறது.

அம்மா உள்பட எல்லோரும் புறப்பட்டு விட்டார்கள். **முடிந்தால்**, மீண்டும் இன்னுமொரு மடலில் சந்திப்போம்.

22.2.09.

**'தமிழரின் தாகம் தமிழீழத் தாயகம்'**

இப்படிக்கு,

**என்றும் உங்கள் அம்பு மறவா**

**தேசம் விடுதலை காண உழைக்கின்ற அன்பு மகள்,**

**தேவகி.**



# நெருப்புக் காடு

காசி ஆனந்தன்

நெருப்பு
விதையானால்
நெருப்பே
பயிராகும்...
முத்துக்குமார்!

தமிழுலகு
பரவிய
நெருப்புக்காடாய்
விளைந்தாயடா
தம்பி...

நீண்ட
நெருப்பின்
வேர்கள்...
நீண்ட
நெருப்பின்
கிளைகள்....

உன்
உருவப்படம்
தாங்கி
இலண்டன்
பாரீஸ்
ரொறன்டோ
சிட்னி
வீதிகளில்
ஈழப்போர்
உலா...

நெருப்பே
முத்துக்குமார்!
உன்
நிழற்படம்கூட
நெருப்பாகிறது
பார்...

ஈழத்தமிழனை
எதிரியின்
நெருப்பு
சாகடிக்கும்...
உன் நெருப்பு
உயிரூட்டி
எழுப்பும்...

தண்ணீர்
ஈழத்தையும்
தமிழ் நாட்டையும்
பிரித்தது...
நெருப்பே !
நீ
இணைத்தாய்...
இணைத்தாய்...

நெருப்பின்
உச்சம்
நீயடா
தம்பி !

எரிமலை அல்ல
நீ...
ஏனென்றால்
எரிமலை
அணைந்து
போகும்...

தமிழ் நாட்டின்
திசைநாலும்
பார்க்கிறேன்...
ஆயிரம்
ஆயிரம்
இளைஞனாய்
தலைநிமிர்கிறாய்
நீ...
இருப்பினும்...

வெடிக்கிறது
தம்பி
நெஞ்சம்...

இளந்தளிர்களை
நீ
நெருப்பாக்கிய
மண்ணில்...

இன்னுந்தான்
கொஞ்சம்கூட
எரியாமல்

சில
பட்ட மரங்கள்...

**இலங்கை தமிழர் பாதுகாப்பு இயக்கம்**
ஜி 2, கீழ்த்தளம், 58 மூன்றாவது முதன்மைச் சாலை,
ஆழ்வார் திருநகர் விரிவாக்கம், சென்னை - 600 087.